[12th February 1959

**Sri K. SATTANATHA KARAYALAR** : ஸார், கன்னியாகுமரி மாவட்டத்தில் முன்பு போடப்பட்டிருந்த திட்டங்களில் ஏதாவது இப்போது தொடர்ந்து நடத்தப்பட்டு வருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்த திட்டங்களின்கீழ் கன்னியாகுமரி ஜில்லாவில் புதிய கிணறுகள் வெட்டுவதற்குள்ள மான்யம் அல்லது கடன் வழங்குவது போன்ற திட்டங்கள் ஒன்றும் இப்பொழுது இல்லை.

**Sri V. SUBBIAH** : ஸார், இவ்விதம் கொடுக்கப்பட்டு வரும் மான்யம், பழைய கிணறுகளை சரிபடுத்துவதற்கும், பழைய கிணறுகளை தோண்டுவதற்கும் பயன்படுத்த ஏதாவது திட்டமிருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்த திட்டங்கள் புதிய கிணறுகள் வெட்டுவதற்குள்ள திட்டங்கள்.

**Sri S. M. ANNAMALAI** : ஸார், இப்போது 2,000 கிணறுகள் வெட்டுவதற்கு அரசாங்கம் திட்டமிட்டிருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. இதை விட அதிகமாக வேண்டும் என்று மாவட்ட கலக்டர்கள் கோரிக்கை அனுப்பியிருக்கிறார்களா ? இதற்கு விண்ணப்பித்துக் கொள்ளும் கடைசி தேதி 30—11—1958 என்று சொல்லப்பட்டிருக்கிறது, இதைப்பற்றி பொதுமக்களுக்கு சரியாக தெரியாது. ஆகவே இந்த தேதியை நீடித்துக் கொடுப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : ஸார், இதிலே வடாற்காடு ஜில்லாவிற்கு 200 கிணறுகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. கலெக்டர் அவர்கள் விண்ணப்பிக்கும் காலத்தை இன்னும் நீடித்து தரவேண்டும் என்று கேட்டுக்கொண்டால் அதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யும்.

**Sri K. R. VISWANATHAN** : ஸார், கொடுக்கப்பட்டிருக்கும் விண்ணப்பங்களை பரிசீலித்து முடிவு எடுக்கவேண்டிய தேதி 31—1—1959 என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதன் பிரகாரம் விண்ணப்பங்களை எல்லாம் பரிசீலித்து முடிவு எடுக்கப்பட்டு அதன் பேரில் கொடுக்கப்பட்டுள்ள அறிக்கை சர்க்காருக்கு வந்து விட்டதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அதைப்பற்றியுள்ள தகவல் என்னிடமில்லை.

**Sri K. RAMACHANDRAN** : ஸார், இந்த 2,000 கிணறுகளுக்கும் விண்ணப்பங்கள் வந்துவிட்டனவா ? இதற்கான சாங்ஷன் எல்லாம் ஆகிவிட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இப்போது இதைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை.

### *Deep Well Boring Scheme in Tiruchendur*

* 250 *Q*.—**Sri M. K. SOMASUNDARAM** : **(on behalf of Sri M. S. Selvarajan)** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) திருச்செந்தூர் தாலூகாவில் **Deep Well Boring Scheme** பரிசீலிக்கப்பட்டிருக்கிறதா ?

(ஆ) எந்தெந்த இடங்களிலிருந்து மேற்படி திட்டம் பரிசீலிக்கப்படவேண்டும் என்று மனுக்கள் வந்துள்ளன ?

(இ) அவைகளின்மேல் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : **(*a*) Yes, Sir.**

**(*b*) Pettaikulam and Kuttam villages.**

12th February 1959]

(c) In regard to the sinking of a trial bore well in Pettaikulam, the Director of Agriculture has instructed the Assistant Agricultural Engineer (Inspection), Madurai, to inspect the site and is awaiting his report.

As regards the Oorani in Kuttam village in Nanguneri taluk, the District Agricultural Officer, Tirunelveli (South) has addressed the Collector for taking up the work and will take further action on receipt of the Collector's reply.

**Sri M. K. SOMASUNDARAM** : ஸர், வெல்போரிங் ஸ்கீம்-க்கு எவ்வளவு தொகை மொத்தம் ஒதுக்கப்பட்டிருக்கிறது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்த கேள்வி இரண்டு திட்டங்களைப்பற்றியதுதான். ஆகையால் இதற்குள்ள மொத்த தொகைப் பற்றிய விபரங்கள் இப்போது என்னிடமில்லை.

**Sri K. R. VISWANATHAN** : இந்த போர் வெல் ஸ்கீம் திட்டம் மாகாண அரசாங்கத்தின் திட்டமா அல்லது மத்திய அரசாங்கத்தின் கீழ் நடத்தப்பட்டு வரும் எக்ஸ்ப்ளோரேடரி ட்யூப் வெல்ஸ் திட்டத்தின் கீழ் நடத்தப்பட்டு வருகிறதா ? இம்மாதிரி திட்டங்களை நடத்துவதற்கு வேறு எந்த ஜில்லாக்களிலெல்லாம் பரிசீலிக்கப்பட்டிருக்கின்றன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இது மாகாண அரசாங்கம் எடுத்துக் கொள்ளக்கூடிய திட்டம்தான். இதே திட்டத்தை மற்ற மாவட்டங்களிலும் நடத்த முடியுமா என்று பரிசீலிக்கப் பட்டிருக்கிறது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலும் இரண்டு இடங்களில் பரிசீலிக்கப்பட்டது. 300 அடி ஆழம் வரையிலும் தோண்டி பரிசீலிக்கப் பட்டது.

**Sri M. S. SELVARAJAN** : இந்த திட்டம் ரெமியுனரேட்டரி நோக்கத்தில்தான் பரிசீலிக்கப்பட்டு வருகிறதா ? அந்த விதத்தில் தான் இதை பரிசிலனை செய்யவேண்டுமென்று ஏதாவது விதிகள் இருக்கின்றனவா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : செலவுக்கேற்றபடி பலன் கிடைக்கவேண்டும் என்பதுதான் முக்கியமாக கவனிக்கப் பட்டு வருகிறது.

**Sri T. M. NALLASWAMI** : இப்போது அமைச்சர் அவர்கள் திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் பரிசீலனை செய்யப்பட்டதாக தெரிவித்தார்கள். இவ்விதம் உடையார்பாளையத்தில் பரிசீலித்து பார்த்துவிட்டு அந்த இடத்தில் இந்த திட்டம் கைவிடப்பட்டது. அதன் பின்னல் கரூர் தாலூகாவில் பரிசீலனை செய்து பார்த்தபோது அது வெற்றிகரமாக இருந்தது. ஆகையால் இன்ஜின் பம்புகளும் வரவழைக்கப்பட்டுள்ளது. இருந்தபோதிலும் அதற்கான இன்ஜின்கள் அமைக்கவேண்டியது விவசாய இலாகாவினர் அமைக்க வேண்டும் என்றும், இதற்கான கட்டிடம் இண்டஸ்ட்ரீஸ் இலாகாவிலிருந்து அமைக்கப்படவேண்டும் என்றும் சொல்லப்பட்டு வருவதால் அங்கே இந்த திட்டம் சுமார் ஒன்றரை வருடகாலமாக நிறைவேருமல் இருக்கிறது. இந்த விபரம் சர்க்காருக்குத் தெரியுமா ? அப்படியானல் அதன்பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கின்றது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இதைப் பற்றி இப்போது என்னிடம் தகவல்கள் இல்லை.